REGD. NO. M. 6511 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

'நம் நாடு'
புதிய சந்தா விகிதம்
★
மூன்று மாதம் ... ... ரூ. 6
ஆறு மாதம் ... ... ரூ. 12
ஒரு வருடம் ... ... ரூ. 24
தனி இதழ் 7 காசுகள்
இலங்கையில் 10 சதம்

மலர் 4] சென்னை: சித்திரை 20௨ வியாழன் (2—5—57) ★ ★ வெளியூர்: சித்திரை 21௨ வெள்ளி (3—5—57) இதழ் [277

# இன உணர்வும் நாட்டுப் பற்றும் பெற்றாக வேண்டும்

## தொழிலாளர்கள் திராவிடர்களாக— விடுதலை வீரர்களாக விளங்க வேண்டும்

### கூலி உயர்வு மட்டுமே பிரச்சினை அல்ல!

### அன்று உணராத கம்யூனிஸ்டுகள் இன்று உணருகின்றனர்

### வர்க்கப் போராட்டம் பற்றி அண்ணா

சென்னை, மே 2—

நேற்று சென்னையில் நடைபெற்ற மே தின விழாவில் பேருரை ஆற்றிய அண்ணா அவர்கள், வர்க்கம் போராட்டம் பற்றி கழகத்தின் கருத்தினைத் தெளிவுபட விளக்கினார்கள்.

இந்த நாட்டில் தொழிலாளருக்குக் கூலி உயர்வு மட்டுமே பிரச்சினை அல்ல என்பதையும், தாயக விடுதலைப் பிரச்சினைக்குப் பரிகாரம் தேட தொழிலாளர்கள் முன்னேடி வரவேண்டும் என்பதையும் அருமையாக எடுத்துரைத்தார்கள்.

அவரது கருத்துமிக்க சொற்பொழிவு இங்கு தரப்படுகிறது:—

"சிம்சன் கம்பெனிகளில் பணியாற்றும் தொழிலாளர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தின் பால் அன்பும் அக்கறையும் கொண்டு தொடர்ந்து காட்டி வரும் ஆதரவிற்கும், செய்துவரும் பேருதவிகளுக்கும் நான் நன்றி கூறிக்கொள்கிறேன்.

**போட்டி**

"இன்று இங்கு மே தின விழாவினை நாம் கொண்டாடிக் கொண்டிருக்கிறோம். இது போலவே நகரில் வேறொரு இடத்தில் காங்கிரஸ் கட்சியினரும், பிறிதோர் இடத்தில் கம்யூனிஸ்டு நண்பர்களும், மற்றுமோர் இடத்தில் சோஷலிஸ்டுகளும், மற்றோர் இடத்தில், பி. சோ. கட்சியினரும் மே விழா கொண்டாடிக் கொண்டிருக்கின்றனர். இப்படிப் பல கட்சியினரும் போட்டி போட்டுக்கொண்டு தொழிலாளர் நலனில் தங்கள் தங்களுக்கே அக்கரை இருப்பதாக உரிமை பாராட்டி விழா கொண்டாடுவதை, தொழிலாளருக்குரிய பெரும் வாய்ப்பு என்றே நான் கொள்ளுகிறேன். ஏனெனில், இன்று எந்தக் கட்சியும், தொழிலாளர்களுக்கு விரோதமானகட்சி என்று கூறிக்கொள்ள முடியாத அளவு, உலகெங்கணும் போலவே நம் நாட்டிலும், தொழிலாளர்தம் வலிவு உணரப்பட்டிருக்கிறது; வலிவு வளர்ந்திருக்கிறது.

**பெருந்தன்மையான கொள்கை**

"தொழிலாளர் இயக்கங்கள், சங்கங்கள் பற்றி திராவிட முன்னேற்றக் கழகம் கொண்டிருக்கிற பெருந்தன்மையான கொள்கையை எனக்கு முன் பேசிய பொதுச்செயலாளர் அவர்கள் எடுத்துரைத்தார்கள்.

"மற்ற மற்றக் கட்சிகள், தொழிற்சங்கங்களைக் கைக் கருவியாக்கிக்கொண்டு, தங்கள் தங்கள் கட்சி வளர்ச்சிக்கு அவற்றைப் பயன்படுத்துவதுமட்டுமின்றி, நம்மை—நமது கழகத்தை இழித்தும் பழித்தும், பேசவும் ஏசவும் செய்வதுடன், சந்தர்ப்பம் கிடைக்கும்போது எதிர்க்கவும் முற்பட்டுள்ள நிலையில் நாமும், திராவிட முன்னேற்றக் கழகத்தில் உள்ள தொழிலாளர்களடங்கிய தனிச் சங்கம் காண்பதைத் தவிர வேறு வழி இல்லை—நியதி இல்லை என்பதை பொதுச்செயலாளர் அவர்கள் விளக்கினார்கள்.

"பெருந்தன்மை, ஒருவன் கொடுத்துக்கொண்டே இருப்பான் — மற்றவன் திருப்பித்தரமாட்டான் என்றிருந்தால் பலன் இல்லை. அதனால்தான், நான் நேற்று சட்டசபையில் பேசும் போதுகூடச் சொன்னேன் —'பெருந்தன்மை என்பது, கொடுத்து வாங்கப்பட வேண்டிய ஒன்று; ஒரு வழி வியாபாரமல்ல,'—என்று!

"இன்று நீங்கள் தொழிற் சங்கம் அமைத்தால், தொழிலாளர் அணிவகுப்பு பிளவுபடும் என்று கம்யூனிஸ்டு நண்பர்கள் பேசுகிறார்கள்.

"ஆனால், இதே கம்யூனிஸ்டுகள் தான் — காங்கிரஸ்காரர்கள் தான்—சோஷியலிஸ்டுகள் தான், நாங்கள் 'கம்யூனிஸ்டுகளே! நீங்கள் தொழிலாளர்களுக்காகப் பாடுபடுவதை நாங்கள் வரவேற்கிறோம்; நீங்கள் தொழிலாளர் தம் பொருளாதார உயர்வுக்காகப் போராடுங்கள்; நாங்கள் அவர்களின் அரசியல் விடுதலைக்கும், சமூக முன்னேற்றத்திற்கும் பாடுபடுகிறோம் என்று கூறியபோது, எங்களைக் கேலி பேசினார்கள்.

"'இவர்களுக்கு என்ன தெரியும்? இவர்களால் என்ன முடியும்? இராகுகாலத்தை விரட்டலாம்; பஞ்சாங்கத்தைப் பொசுக்கலாம்; வேத-புராண இதிகாசங்கள் கற்பிக்கும் மூடப்பழக்கங்களை அகற்றலாம்; வேறென்ன இவர்களுக்குத் தெரியும்?'—என்றார்கள்.

"நாங்கள், அன்று கூறினோம்— 'நீங்களே பொருளாதாரப் போராட்டத்தை நடத்துங்கள்; நாங்கள் அறியாமையை விரட்ட, விடுதலை உணர்வு பெறப் பாடுபடுகிறோம்' — என்று! இவர்கள் கேட்டார்களா? இல்லை. நாங்கள் வேண்டிக் கேட்டோம்—இவர்கள் தாண்டிச் சென்றார்கள்!

"அதே கம்யூனிஸ்டுகள் தான் இன்று, நாமும் தொழிற்சங்க இயக்கத்தில் பங்கு பெற முன் வரும்போது, 'நான் இருக்கிறேனே, நீ எதற்காக?' என்று கேட்கிறார்கள்! புதிய 'ஞானோதயம்' பேசுகிறார்கள்!

**ஆமை புகுந்த வீடு!**

"'ஆமை புகுந்த வீடும், அமீனா புகுந்த வீடும் உருப்படாது' என்பார்கள்! அதைப்போல, கம்யூனிஸ்டுகள் புகுந்த எந்தத் துறையும் உருப்படவில்லை; பாழாகிப் போகிறது! அதற்கு நாங்கள் என்ன செய்வது?

**எழுகின்ற கதிரவன்!**

"நீங்கள் அறியலாம்—இப்போது தூத்துக்குடியில் உப்பளத் தொழிலாளர் சங்கத்தை நமது கழகத் தோழர்கள்தான் நடத்தி வருகிறார்கள். கட்டை வண்டித் தொழிலாளர்கள் நமது கழகத் தோழர்களைத்தான் தலைவர்களாக ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

"திருச்சியில், சுருட்டு, பீடித் தொழிலாளர் சங்கமும் நமது கழகத்தவர்களால் நடத்தப்படுகிறது. அதேபோல, பஸ் போக்கு-வரத்து தொழிலாளர்களும் நமது கழகத்தவர்களால் தான் நிர்வகிக்கப்படுகிறார்கள்.

"ஆதவன் எழும்போது—உதிக்கின்ற நேரத்தில், ஒளிக் கதிர்கள் கொஞ்சம் கொஞ்சமாக எழுந்து ஒளி பரப்புவான்; கதிரவன் ஒளி பரவப்பரவ இருள் அகலும்; முழு ஒளி கிடைக்கும். அதுபோலவே, எதிர்காலத்தில் நாடெங்கும் பல தொழிற் சங்கங்களை நமது தோழர்கள் நடத்தவிருக்கிறார்கள் என்பதின் அறிகுறியாக சில தொழிற் சங்கங்கள் இப்போது நமது தோழர்களால் நடத்தப்பட்டுவருகின்றன.

"நாங்கள், தொழிற் சங்கங்களில் பங்கு பெறுவதினாலேயே, நாங்கள்தான் பாட்

(4-ம் பக்கம் பார்க்க)

★★★★★★★★★★★★★★★★★

## தி. மு. க. பாராளு மன்ற உறுப்பினர்கள்

### டெல்லி புறப்பாடு

சென்னை, மே 2—

நாளை 3—5—57 மாலை 5-மணிக்கு, சென்னை சென்ட்ரல் இரயில் நிலயத்திலிருந்து டில்லிக்குப் புறப்படும் 'ஏர் கண்டிசன் டீ-லக்ஸ் எக்ஸ்பிரஸ்' வண்டியில், டில்லி பாராளு மன்ற (மக்கள் சபை)த்திற்கு தி. மு. கழகச் சார்பில் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத் அவர்களும், இரா. தர்மலிங்கம் அவர்களும் செல்ல இருப்பதால், அவர்களுக்குக் கடிதம் எழுதும் தோழர்கள் அவர்கள் அங்கு சென்ற பின்னர் அறிவிக்கும் டில்லி முகவரிக்கு எழுதுமாறு கோரப்படுகிறார்கள்.

★★★★★★★★★★★★★★★★★★

## பொதுச்செயலாளர் தந்த மே தினச் செய்தி!

"மேதினியெங்கும் கொண்டாடப்படும் இந்த மேதின விழா தொழிலாளர்கள் இதுவரை பெற்ற உரிமைகளை நினைத்துப் பெருமைப்படவும் பெற வேண்டியனவற்றிற்காக போராடத் தயாராவதற்கும் பயன்பட்டுவரும் ஒரு பெரு விழாவாகும்.

"இந்த மே விழாவில் மிகப் பெரும்பாலும் பாட்டாளிகளையே உறுப்பினர்களாகக் கொண்ட திராவிட முன்னேற்றக்கழகத்தவர் கலந்து கொள்வது சாலப் பொருத்தமுடையதாகும். நமது கழகத்தில் பட்டக்காரர்களோ ஜமீன்தார்களோ, நிலப்பிரபுக்களோ மிராசுதார்களோ இருக்கவில்லை. அப்படிப்பட்ட கழகத்தவர் கலந்து கொள்ளும் இந்த மே விழா தான் வேறு பலரால் கொண்டாடப்படும் மே விழாக்களை விடச் சிறப்பானதாகும்.

"இந்த விழாவில், தி. மு. கழக எம். எல். ஏ.-க்களுக்குப் பாராட்டு வழங்கினர். அது சாலப் பொருத்தமுடையதாகும். கழக எம்.எல்.ஏ.-க்கள்தான் தொழிலாளர்களைப் புரிந்துகொண்டவர்கள்—அவர்களின் பிரச்சினையைப் புரிந்து கொண்டவர்கள்—பிறருக்குப் புரியவைக்கும் ஆற்றல்கொண்டவர்கள் என்பதால், பாட்டாளிகளின் கழகமான தி. மு. கழக எம். எல். ஏ.-க்களை மே விழாவில் பாராட்டுவது சாலவும் சிறந்ததாகும்.

"சக்திக்கேற்ற உழைப்பு—தேவைக்கேற்ற வசதி என்பதே நமது இலட்சியம்! 'உழைப்பவருக்கே உலகம்' என்பது நமது கொள்கை! இந்த இலட்சியக் கொள்கை வெற்றிபெறும் வரையில், இடையில் தோன்றக்கூடிய எல்லாச் சிக்கல்களையும் எதிர்த்து நாம் போரிட வேண்டும்—போரிடுவோம் என்று உறுதிபூண வேண்டும்.

"தொழிற் சங்கங்களைப் பொறுத்தவரையில் நமது கருத்தை நாம் ஏற்கனவே தெளிவாக்கியிருக்கிறோம்.

"தொழிற் சங்கங்கள், அரசியல் கட்சிகள் என்ற கொழு கொம்பினைச் சுற்றிப் படரும் கொடிகளாக இருக்க வேண்டுமே தவிர, அரசியல் கட்சிகள், தொழிற் சங்கங்கள் என்ற கொழுகொம்பைச் சுற்றிப் படரும் கொடிகளாக இருக்கக் கூடாது.

"ஆனால், இப்போது பல அரசியல் கட்சியினர் தொழிற் சங்கங்களைத் தங்கள் கட்சிகளின் வளர்ச்சிக்கே பயன்படுத்தி வருகின்றனர்.

"தொழிற் சங்கங்கள், அரசியல் கட்சிகளின் பெயரால் வர்ணம் கொடுத்து பிரிந்துவிட்டால்—ஒவ்வொரு கட்சிக்கும் ஒரு தொழிற் சங்கம் என்ற நிலைமை ஏற்பட்டுவிட்டால், பிற அரசியல் கட்சியினர் ஏற்படுத்தும் அந்த நிலை எங்களையும் எங்கள் கழகத் தோழர்கள் கொண்ட தொழிற்சங்கம் அமைக்கும் நிலைக்குத் துரத்துகின்றது. அது தவிர, எந்தக் கட்சிச் சார்புமின்றி தொழிற் சங்கங்கள் பொதுத்தன்மையுடன் இயங்குமானால், நாங்கள் அதனை உடைக்கும் நோக்கத்துடன் புதிய தொழிற்சங்கங்கள் துவங்கமாட்டோம்.

"ஏனைய அரசியல் கட்சியினர் தங்கள் தங்கள் கட்சிக்காகத் தொழிற் சங்கங்களைப் பயன்படுத்தாமல் பொதுநோக்குடன் நடந்துகொள்ள வேண்டும் என்பதையே நான் தி. மு. கழகத்தின் மே தினச் செய்தியாக அறிவிக்கிறேன்,"

—என்று பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், 1—5—57 அன்று சென்னையில் நடைபெற்ற மே விழாக் கூட்டத்தில் குறிப்பிட்டுள்ளார்.

நம் நாடு
தி.மு.க.தின இதழ் ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்
சென்னை 2—5—57 வியாழன்

# என்றுதான் உணருமோ?

★

ஆறரை இலட்சம் 'இந்தியர்'கள் (தமிழர்கள்) 'நாடற்றவர்'களாக்கப்படுவர்.

இவர்களை, இலங்கையின் ஓட்டுரிமை இல்லாத குடிமக்களாக வைத்திருக்க ஒரு யோசனை தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

சிங்கள மொழி மட்டுமே ஆட்சி மொழி - அரசாங்க மொழியாகும் என்ற தங்களின் நியாயமான உரிமையைப் பறிக்கும் சட்டத்திற்கு, இலங்கை வாழ் தமிழரின் எதிர்ப்பு வலுத்து வருகிறது.

இந்தியத் துணைக் கண்டத்துப் பிரதமர் பண்டித நேரு, பௌத்த விழாவில் கலந்து கொள்வதற்காக இலங்கை வரச் சம்மதித்துள்ளார்.

மே திங்களில் இலங்கை செல்லும் பண்டிதருக்கு, இலங்கை வாழ் இந்தியர்தம் பிரச்சினைகள் குறித்து இலங்கைப் பிரதமர் பண்டார நாயகாவுடன் பேசுவதற்கு நேரமிருக்காது.

இந்த ஐந்து செய்திகளும் கடந்த ஒரு திங்களுக்குள்ளாக கொழும்பு நகரிலிருந்தும், புதுடில்லிப் பட்டணத்திலிருந்தும் வெளியிடப்பட்ட பல்வகைச் செய்திகளுள், இலங்கைத் தமிழரையும், அவர்களின் நலனில் அக்கரைகொண்ட தாய்த் தமிழகத்தவரையும் பொறுத்து விசேட கவனத்திற்குரிய செய்திகளாகும்.

ஆறரை இலட்சம் தமிழர்களுக்குமேல் குடியுரிமை வழங்கப்படாமல் நாடற்றவர்களாக்கப்படுவர் என்ற செய்தி, பாதிக்கப்பட்டவர்களுடையவும், அவர்களைக் கண்டு மனம் பதைக்கிற நம்முடையவும் நோக்கிலிருந்து பார்க்கையில், இலங்கைச் சிங்கள வெறியர்களுக்குத் தலைமை தாங்கும் பண்டார நாயகாக்களின் நன்றிமறந்த கொடுங்கோன்மையைக் கூறுவதாகத் தெரியலாம். ஆனால் சிங்கள மக்கள், பண்டாவின் மிகப் பெரிய இராஜ தந்திர வெற்றியாக அந்தச் செய்தியைக் கொண்டாடுவர். ஏனெனில், ஆசியாவின் ஜோதி — உலகப் பிரச்சினைகளுக்கு எல்லாம் மூலிகை தேடித் தருபவர் — நிகழ் காலத் தலைமுறையில் ஒப்பற்ற அரசியல் விற்பன்னர் என்றெல்லாம் பாராட்டப்படுகிற பண்டித நேருவுடன் ஒப்பந்தம் செய்துகொண்டல்லவா 'தமிழர்களைத் துரத்தவேண்டும்' என்ற தங்களின் அபிலாஷையை பண்டார நாயகா பூர்த்தி செய்கிறார் என்றுதானே சிங்கள வெறியர்கள் கருதுவர்?

டெல்லியில் ஒருமுறைக்கு இருமுறையாக, இந்தப் பிரச்சினைக்கான பரிகாரம் என்றுகூறி, இலங்கைத் தலைவர்களுடன் பண்டிதர், ஒப்பந்தங்களில் கைச்சாத்து இட்டபோது, அவரது டெல்லி வட்டாரங்கள் கூறியதெல்லாம், குடியுரிமை கோரியுள்ள சுமார் ஒன்பது இலட்சம் பேரில் ஒன்றரை இலட்சத்திற்கும் குறைவானவர்கள்தான் குடியுரிமை பெறுமற் போவர் என்பதுதானே!

ஆனால், நடக்கப்போவது நேர் எதிர்மறையான சம்பவம் என்றால், சிங்கள வெறியர்கள், தங்கள் தலைவர்களான பண்டாக்கள், பெயரும் புகழும்பெற்ற பண்டிதர்களைவிட பெரிய இராஜதந்திரிகள் என்று எண்ணி மகிழ்த்தானே செய்வர்?

'சிங்களம் மட்டுமே இலங்கையின் அரசு மொழி' என்ற சட்டம் அடக்கிக்கொண்டிருக்கிற அநீதியின் அளவை, நாம் அளவிட்டுக் கூறத்தேவை இல்லை; ஏற்கனவே இங்கு எடுத்துரைத்திருக்கிறோம்.

மூன்றுவது செய்தி, இலங்கையில், எத்தகு அநாகரிகமான சிந்தனையூறும் கொடிய மனம் படைத்தவர்கள்கூட இருக்கிறார்கள் என்பதைச் சொல்வதாகும். இந்த யோசனை பற்றி, அதிகாரத்திலிருக்கும் பண்டாக்கள் இதுவரை ஏதும் தெரிவிக்கவில்லை.

கடைசி இரு செய்திகள், இலங்கைவாழ் தமிழரில் சிலருக்கு அதிர்ச்சியையும் ஆச்சரியத்தையும் ஒருங்கே தந்திருந்தாலும், நமக்கு அத்தகு உணர்ச்சிகள் எழவில்லை. காரணம், நாம் பண்டிதரை நன்கு அறிவோம். இப்படிப்பட்ட செய்தி நாம் எதிர்பாராததும் அல்ல.

மொழிப் பிரச்சினை—இலங்கையில் குடியுரிமை பெற்று அந்த நாட்டுக் குடிமக்களாக வாழும் சுமார் இருபது இலட்சம் தமிழர்களையும், குடியுரிமை வழங்கும் பிரச்சினை — சுமார் ஒன்பது இலட்சம் தமிழர்களையும், ஆக சுமார் 30 இலட்சம் மக்களைப் பொறுத்த பிரச்சினைகளாகும். இந்த மக்களின் ஒட்டும் உறவும், தாய்த் தமிழகத்துடன் இன்றளவும் இருக்கின்றன. இவர்களின் வாழ்வும் தாழ்வும், தாய்த் தமிழக மக்களின் மகிழ்ச்சி அல்லது கலக்கம் என்ற உணர்ச்சி எழுச்சிகளுக்குக் காரணமாகக் கூடியவையாகும். 'இந்தத் தாய்த் தமிழகத்தவரும் எனது ஆளுகைக்குட்பட்டவர்களே,' என்று கூறிடுவதில் பெருமை காண்பவர் பண்டிதர்.

தனது ஆளுகைக்கு உட்பட்ட மக்களுக்குக் கவலைதரக் கூடிய இலங்கைவாழ் தமிழ் மக்களின் பிரச்சினை பற்றி கவனம் செலுத்த அந்தப் பண்டிதருக்கு இலங்கை செல்லுகையில்கூட நேரம் இல்லையாம்!

இவரும், இவர் தலைமை தாங்கும் வடவரும்தான், இந்த நாட்டின்—தாய்த்தமிழகத்தின் மெய்க்காப்பாளர்களாக இருக்க வேண்டுமாம்! அது தான் 'அகில இந்தியா'வாம்!

நியாயம், எத்தனை பிரகாசமாக ஒளிவிடுகிறது, இந்த விவாதத்தில்!

'தமிழகமே! தாயகமே!! உன் மனமயக்கம் என்றுதான் தெளியுமோ? என்றுதான் நீ, இந்த ஏகாதிபத்தியவாதிகளின் உண்மை சொரூபத்தை முழுவதுமாக உணரப்போகிறாயோ?

## டில்லியருகில் தொழில் நிலையக்கூடம்

பல இலட்சம் செலவில் துரித முன்னேற்றம்

புதுடில்லி, ஏப். 30—

இங்கிருந்து சுமார் 7 மைல் தூரத்திலுள்ள ஒக்லா தொழில் நிலைய நகரம் துரிதமாக முன்னேறி வருகிறது. 40 ஏகர் பரப்பளவு உள்ள இந்தப் பகுதியில் சிறு ரகத் தொழில்களுக்கான 35 தொழிற்சாலைகள் நிர்மாணிக்கப்பட்டு வருகின்றன.

நாடெங்கிலும் நிர்மாணிக்கப்படவிருக்கும் இத்தகைய 65 - தொழில் நகரப் பகுதிகளில் இது தான் மிகப் பெரியது. இதற்கு சுமார் ரூ. 76 இலட்சம் செலவாகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இதன்றி மேலும் 70 - ஏகர் நிலப்பரப்பு பெறப்பட்டிருக்கிறது. இதில் 100-க்கு மேற்பட்ட தொழிற்சாலைகளை ரூ. 1 - கோடியில் நிறுவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

## சனாதனிகளின் சண்டித்தனம்!

காசி, ஏப். 30—

காசி விசுவநாதர் ஆலயத்திற்குள் நுழைவிடாமல் தாழ்த்தப்பட்டோர் குழு ஒன்றைத் தடுத்ததாக 12 சனாதனப் பெண்கள் இரண்டு நாட்களுக்கு முன்னர் கைது செய்யப்பட்டனர்; அவர்கள் மாவட்ட சிறையில் காவலில் வைக்கப்பட்டுள்ளனர்.

இதற்கு எதிராகச் சனாதனிகள் சட்டவிரோதமான செயல்களில் ஈடுபட முனைந்துள்ளனர்.

நகர வீதிகளின் வழியே உ. பி. முதலமைச்சர், உள்நாட்டு இலாகா அமைச்சர் ஆகிய இருவரின் 'கொடும்பாவி'யை இழுத்துச் சென்று போலீஸ் நிலையத்தின் எதிரில் தீயிட்டுக்கொளுத்தியுள்ளனர்.

## சென்னை நகரசபையின் நடவடிக்கைகள்

இனி தமிழிலேயே நடத்தப்படும்

சென்னை, மே. 1—

சென்னை நகர சபையின் நடைமுறைகளை பற்றிய விதிகள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. இதை சென்னை நகரசபை ஏற்றுக்கொண்டதும், அதன் நடவடிக்கைகள் தமிழிலேயே நடத்தப்படுமாம். ஆனால் அரசாங்கத்துடன் நடைபெறும் கடிதப் போக்குவரத்து மட்டும் ஆங்கிலத்தில் நடைபெறுமாம்.

## நீலகிரி மாவட்ட ஆட்சி மன்றத்திற்கு நிதி பற்றாக்குறை!

சென்னை, ஏப். 30—

நீலகிரி மாவட்ட ஆட்சி மன்றம் சரிவர இயங்குவதற்குப் போதிய நிதி நிலைமை இல்லாததால் 'கருணை மானி'யமாக ரூ. 2 இலட்சம் சென்னை அரசாங்கம் வழங்கவேண்டும் என்று மாவட்டக் கழகத் தூதுக் குழு ஒன்று மாநில சர்க்காரைக்கேட்டுக்கொண்டிருக்கிறது.

## ஆந்திரத்தில் 10,000 கிணறுகள் வெட்ட நிதி உதவி!

ஐதராபாத், ஏப். 30—

குறுகிய காலத்தில் உணவு உற்பத்தியைப் பெருக்குவது சம்பந்தமாக ஆந்திர மாநிலத்தில் சுமார் 10,000 கிணறுகள் வெட்டுவதற்கு மானியமாக அளிக்க அரசாங்கம் ரூ. 1 கோடி ஒதுக்கியுள்ளதாகத் தெரியவருகிறது.

## இந்திய விவசாயிகளுக்கு 6,000 டாலர்கள்!

அமெரிக்க மக்கள் அன்பளிப்பு

இந்திய கிராம வசதிகளுக்கு விவசாய சாதனங்களை வாங்கிக் கொடுக்குமாறு 'கெர்' நிறுவன டைரக்டரிடம் அமெரிக்க மக்களின் சார்பில் 6,000 டாலர் 'செக்' அளிக்கப்பட்டுள்ளதாம்.

## வடநாட்டில் வளரும் இரும்பு-உருக்குத் தொழில்

### சில புள்ளி விவரங்கள்

வடநாட்டில் இரும்பு-உருக்குத் தொழிற்சாலைகள் மூன்று உருவாகிவருகின்றன.

ரூர்கேலா, பிலாய், துர்க்காபூர் ஆகிய மூன்று நகரங்களில் அமைக்கப்பட்டுள்ள இத்தொழிற்சாலைகள், மாபெரும் அளவில் இரும்பு, எஃகு ஆகிய பெருந் தொழிற் சாதனப் பொருள்களை உற்பத்தி செய்யத் தொடங்கியிருக்கின்றன.

ஒவ்வொரு தொழிற்சாலையும் பத்து இலட்சம் டன் வார்ப்பட இரும்பை ஆண்டுதோறும் உற்பத்தி செய்ய வேண்டுமென்றும், இவற்றுள் ஏதாவது ஒன்றில் வார்ப்படத் தொழிற்சாலைத் தரத்தில் 3,50,000 டன் வார்ப்பட இரும்பு உற்பத்தியாவதற்கு ஏற்பாடு செய்யப்பட வேண்டுமென்றும் அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது.

ரூர்கேலாவில் அமைக்கப்பட்டுள்ள இரும்பு—எஃகு தொழிற்சாலைக்காக 1956—61-ம் ஆண்டுகளில் ஏறத்தாழ ரூ. 128 கோடி செலவாகுமென்று தெரிகிறது. இத்தொழிற்சாலையில், தட்டையான எஃகுப் பொருள் 7,20,000 டன் அளவில் உற்பத்தியாகும் என்று எதிர்பார்க்கப்படுகின்றது.

மத்தியப் பிரதேசத்திலுள்ள பிலாய்நகர் உற்பத்திச்சாலைக்காக ரூ. 110 கோடி செலவாகும். இங்கு கனரகமாகவும், நடுத்தரமாகவுமுள்ள விற்பனைக்குரிய எஃகுப் பொருள்கள் 7,70,000 டன் அளவில் உற்பத்தி செய்யப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

மூன்றுவதாக, மேற்கு வங்காளத்திலுள்ள துர்க்காபூர் உற்பத்திச்சாலைக்கு ரூ. 115 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது. நடுத்தர அளவிலும் இலேசான தன்மையிலும் 7,90,000 டன் எஃகுப் பொருள்கள் இங்கு உற்பத்தி செய்ய முடியும் என்று எதிர்பார்க்கப்படுகின்றது.

வடநாட்டிலுள்ள இம்மூன்று தொழிற்சாலைகளுக்கும் முறையே ரூ. 128 கோடி, ரூ. 110 கோடி, ரூ. 115 கோடி செலவிடுவதற்குத் திட்டமிடப்பட்டிருப்பதிலிருந்து வடநாட்டில் இரும்பு—எஃகுத் தொழிலமைப்பின் மாபெரும் தன்மை புலப்படும்.

## ரூ. 1,000 கோடி மதிப்புள்ள சாதனம்

### இந்திய இரயில்வேக்கள் வாங்குவதற்குத் திட்டம்

ஒரு கண்ணோட்டம்

இந்தியாவில் மிகப் பெரிய அளவில் சாமான்களை வாங்கி வரும் தனிப்பட்ட நிறுவனம் இந்திய இரயில்வேக்கள்தானும்!

சிறிய குண்டூசியிலிருந்து பிரம்மாண்டமான இரயில் எஞ்சின் வரை பலவகைப்பட்ட மொத்தம் சுமார் 75,000 பொருள்கள் இந்திய இரயில்வேக்களுக்குத் தேவையாக உள்ளனவாம்!

இந்தியாவில் இரயில்வேக்கள் கொள்முதல் செய்யும் சாதனங்களின் மொத்த அளவு, சர்க்காரின் இதர எல்லா இலாகாக்களும் ஒன்றுசேர்ந்து வாங்கும் சாதனங்களின் மொத்த அளவைக் காட்டிலும் அதிகமாகும்.

1944—1945-ம் ஆண்டில் இரயில்வேக்கள் வாங்கிய சாதனங்களின் மொத்த மதிப்பு ரூ. 45 கோடியாக இருந்தது; ஆனால், 1954—55-ம் ஆண்டில் ரூ. 100 கோடிக்குமேல் சென்றுவிட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகால இறுதியில் இது ரூ. 200 கோடிக்கு உயர்ந்துவிடுமென மதிப்பிடப்பட்டிருக்கிறது.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இரயில்வேக்களின் கொள்முதல் மொத்த மதிப்பு சுமார் ரூ. 513,78,00,000 ஆகும்.

இரண்டாவது திட்டகாலத்தில் இரயில்வேக்கள் மொத்தம் ரூ. 1,000 கோடிக்கு சாமான்கள் வாங்கக்கூடும்; இந்தத் தொகையில் சுமார் ரூ. 400 அல்லது ரூ. 500 கோடி வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதற்குச் செலவாகக்கூடும்.

மொத்தம் ரூ. 380 கோடிக்கு வாகனங்கள் வாங்கப்படும்; இதில் ஏறக்குறைய ரூ. 158 கோடி மதிப்புள்ள சாதனங்கள் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும்.

ரூ. 380 கோடிக்கு வாங்கத் திட்டமிட்டுள்ள வாகனங்களில் 2,364 இரயில் எஞ்சின்களும், 10,419 இரயில் பெட்டிகளும், 485 மின்சார இயக்கச் சாதனங்களும், 1,07,247 வாகன்களும் அடங்கியுள்ளன.

## மைசூர் மாநிலத்தில் உணவு நெருக்கடி?

டில்லியிடம் கேட்பதென முடிவு

பெங்களூர், ஏப். 30—

மைசூர் மாநிலத்தில் உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டுள்ளதாம். அடுத்த ஆறு மாதத்திற்கு திங்கள்தோறும் 12,000 டன் உணவுத் தானியங்கள் தேவைப்படுமாதலால் இதை விநியோகிக்குமாறு இந்தியப் பேரரசை மாநில சர்க்கார் கேட்பதெனத் தீர்மானித்திருக்கிறது.

## இந்த அதிசயத்தைக் கேட்டீர்களா?

பெங்களூர், ஏப். 30—

குறைந்தபட்ச ஊதிய வருமானக்காரர்களுக்குக் குடியிருப்பு வசதி ஏற்படுத்த இந்திய அரசாங்கத்தால் கட்டப்பட்டுள்ள 116 வீடுகளில், சுமார் 100 வீடுகள் காலியாக உள்ளதாம். இதற்குக் காரணம், அந்த வீடுகளில் தண்ணீர் வசதியும், சுகாதார வசதியும் இல்லாதது தானும்!

## குடியரசு தலைவர் தேர்தலை எதிர்த்து வழக்கு

தீர்ப்பு ஒத்திவைப்பு

புதுடில்லி, ஏப். 30—

இமாசலப் பிரதேசத்திலும், பஞ்சாபின் ஒரு பகுதியிலும் இன்னும் தேர்தல் முடிவு பெறாததால், குடியரசுத் தலைவர் தேர்தல் நடத்துவது அரசியல் சட்டத்திற்கு விரோதமானது என்று தொடரப்பட்ட வழக்கு விசாரணை முடிந்து, மனுக்கள்மீது தீர்ப்பளிப்பதை இந்திய உயர்நீதி மன்ற அரசியல் சட்ட பெஞ்சு ஒத்திவைத்துள்ளது.

மே 6-ந் தேதி குடியரசுத் தலைவர் தேர்தல் நடைபெறவிருப்பதைத் தடை செய்ய வேண்டுமென்று மனுதாரர்கள் கோரினர்.

## உ. பி. முதலமைச்சர் தேர்தல் செல்லாது

கம்யூனிஸ்டு மனு

காசி, ஏப். 30—

உ.பி.முதலமைச்சர் சம்பூர்ணானந்த், நடைபெற்ற தேர்தலில் அரசாங்க அதிகாரிகளைத் தமக்குச் சாதகமாக பயன்படுத்திக் கொண்டார் என்றும், அவருடைய தேர்தல் செல்லாது என்றும் போட்டியிட்ட கம்யூனிஸ்டு அபேட்சகர் மனுச் செய்துக் கொண்டுள்ளார் என தெரிய வருகிறது.



# பெற்ற இடங்கள் குறைவானாலும் வெற்றிகள் சாதாரணமானவை அல்ல!

## புதியதோர் சமுதாயம் காணும் முயற்சியில் 'முதல் ஒத்திகை'யை மேற்கொண்டோம்!

### ஏற்பட்ட அனுபவங்களை முன்னிறுத்தி எதிர்கால வெற்றிக்கு வழிகோலுவோம்

**சென்னைக் கூட்டத்தில் இரா. செழியன் விளக்கவுரை**

28—4—57-ல், சென்னை பி. அண்டு சி. ஆலைத் தொழிலாளர்கள் சார்பில், தி. மு. கழக எம்.எல்.ஏ.-க்களுக்கு நடைபெற்ற பாராட்டு விழாக் கூட்டத்தில், தோழர் இரா. செழியன் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் ஒரு பகுதி நேற்றைய இதழில் வெளிவந்துள்ளது; அவரது பேச்சின் மறுபகுதி இங்கு தரப்படுகிறது:—

"இங்கு ஒரு பெருங்கூட்டம் கூடியுள்ளது; மக்கள் திரள் இந்தச் சதுக்கத்தில் இடம் போதாமல் நிறைந்து, பக்கத்துத் தெருக்களிலெல்லாம் வழிந்து எங்கு பார்த்தாலும் நிரம்பியுள்ளது. இதே நேரத்தில் கடற்கரையில் ஒரு கூட்டம் நடைபெறுகிறது. இந்தக் கூட்டம் பஞ்சாலைத் தொழிலாளர்களால் நடத்தப்படுகிறது. அங்கு நடைபெறும் கூட்டம் காங்கிரஸ் கட்சியால் கூட்டப்பட்டுள்ளது. கடந்த இரண்டுவார காலமாக அரும்பாடுபட்டு, ஏராளமான விளம்பரத்துக்குப்பின் அவர்கள் கூட்டம் போட்டுள்ளனர். இரண்டு கூட்டத்துக்கும் ஒட்டப்பட்ட சுவரொட்டிகளைப் பார்த்தாலே இரு கட்சிகளின் தன்மையும், அவைகள் பெற்ற வெற்றியின் நிலைமையும் புரியும்.

"கடற்கரையில் கூடியுள்ள காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் வெற்றி பெற்ற 150 காங்கிரஸ் எம்.எல்.ஏ.-க்கள் மக்களுக்கு அறிமுகப்படுத்தப்படுவார்கள். அறிமுகம் என்றாலே, தெரியாத ஒருவரைத் தெரிந்துகொள்ள முதல் தடவையாகச் சொல்லிப் பழக வைத்தல்ஆகும். கடந்த எழுபது ஆண்டுகளாக இந்த நாட்டு அரசியல் வரலாற்றில் இடம் பெற்றுள்ள ஒரு கட்சி — வலிவும் பொலிவும் உள்ள பெரிய கட்சி—இந்தியாவில் மட்டுமல்ல —உலகமெங்கும் நல்ல விளம்பரம் பெற்ற கட்சி—அத்தகைய காங்கிரஸ் கட்சியின் சார்பில் வெற்றி பெற்ற 150 பேர்கள் அறிமுகப்படுத்தப்படவேண்டிய நிலையில் இருக்கின்றனர்; காங்கிரஸ் எம். எல். ஏ.-க்கள் அங்கு மக்களுக்கு அறிமுகப்படுத்தப்படுகின்றனர். ஆனால், திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் வெற்றி பெற்றவர்களுக்கு இங்கு மக்களால் பாராட்டுதல் நடைபெறுகிறது. அங்கு அறிமுகம்; இங்கு பாராட்டுதல்!

"திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கு அறிமுகம் தேவைப்படவில்லை. இதில் ஒரு அடிப்படை உண்மைகூட இருக்கிறது. இந்த நாட்டில் திராவிட முன்னேற்றக் கழகத்துக்கோ, கழகத் தோழர்களுக்கோ அறிமுகம் தேவையில்லை.

"திராவிட முன்னேற்றக் கழகம் இந்த நாட்டின் சொந்தக் கட்சி. அதன் தலைவர்கள், தோழர்கள், தேர்தலுக்கு நிறுத்தப்பட்ட அபேட்சகர்கள் மக்கள் மத்தியிலிருந்து எடுக்கப்பட்டவர்கள்—மக்களிடையே என்றும் இருப்பவர்கள்!

"வீட்டின் சொந்தப் பிள்ளைக்கு அந்த வீட்டில் அறிமுகம் தேவைப்படாததுபோல, திராவிட முன்னேற்றக் கழகத்துக்கு மக்களிடை அறிமுகம் தேவைப்படவில்லை.

"அதன் சார்பில் வெற்றி பெற்ற 150 பேர்களை அறிமுகப்படுத்தும் பொழுதுகூட, என்ன சொல்லி காங்கிரஸ் அறிமுகப்படுத்தும்? 'இவர்தான் அந்த ஊர் ஜமீன்தார்; இவர் இந்த ஊர் மிட்டாதார்; அவர் அந்த ஊர் ஆலையூரார்; 'அவர் இந்த ஊர் நிதியரசர்'—என்று, அவர்களுடைய சொந்த நிலையைப் பற்றிச் சொல்ல முடியுமே தவிர, அவர்களுக்கும் அரசியலுக்கும் இருந்த நல்ல தொடர்பைப் பற்றியோ, அவர்கள் செய்த தியாகங்களைப் பற்றியோ மிகப் பலருக்குச் சொல்ல முடியாது.

"காங்கிரஸ் கட்சி கடந்த 70 - ஆண்டுகளாக பணியாற்றி இருந்த போதிலும், இந்த நாட்டில் அரும்பெரும் தியாகங்களைச் செய்திருந்தபோதிலும், இன்று காங்கிரசில் இருப்பவர்கள் அன்றைய தியாகங்களைச் செய்தவர்களல்ல! அந்தக் காரணத்தால்தான், தேர்தல் காலத்தில் காந்தியார் பெயரைச் சொல்லியும், நேரு பெயரைச் சொல்லியும், மற்றும் தியாகம் செய்தவர்களின் பெயர்களைச் சொல்லியும் — அதாவது, அறிமுகமான தியாகஞ் செய்தவர்களைப் பற்றிச் சொல்லி இவர்கள் ஓட்டுக் கேட்டார்கள். இப்பொழுது வெற்றிபெற்றபின் இவர்களை மக்களுக்கு அறிமுகம் செய்யவேண்டியிருக்கிறது.

'தியாகஞ் செய்த பழம்பெரும் தேசத் தலைவர்களை காங்கிரஸ் அபேட்சகர்கள் துணைக்கு அழைத்திருக்கிறார்கள்! அவர்களை மட்டுமல்ல — வேறு யார் யாரையோவெல்லாம் காங்கிரஸ் கட்சி துணைக்கு அழைத்திருக்கிறது! ஆண்டவனையே அழைத்திருக்கிறது! ஏசுவை அழைத்திருக்கிறது! குரானை அழைத்திருக்கிறது! சில இடங்களில் இறந்து போனவர்களைக்கூட அழைத்துவந்து ஓட்டுப் போடச் செய்திருக்கிறது! சேலத்தில், சிறைக் கம்பிகளுக்குப் பின்னால் இருந்த ஒருவனை எப்படியோ 'ஓட்டு'ப்போடச் செய்திருக்கிறது! இவ்வாறு இறந்தவர்கள்—இல்லாதவர்கள் எல்லோர் பேரிலும் காங்கிரசு 'ஓட்டு' பெற்றிருக்கிறது! பணத்தைத் தந்து, பதவியைக் காட்டி, அதிகாரத்தை உபயோகித்து, காங்கிரஸ் ஓட்டுகளைப் பெற்றது!

"ஆனால், திராவிட முன்னேற்றக் கழகம் பெற்ற ஓட்டுகள் அப்படிப்பட்டவை அல்ல; மிகத் தூய்மையானவை—கண்ணியமானவை —கழகத்தின் கொள்கைகளைச் சொல்லி வாங்கப்பட்டவை! அவைகள் மீது மாசோ மருவோ கிடையாது.

"திராவிட முன்னேற்றக் கழகம் சட்டசபையில் 15 இடங்களைத்தான் பிடித்துள்ளது; ஆனால், மக்கள் மத்தியில் 17 இலட்சம் இடங்களை — இதயபீடங்களைப் பிடித்துள்ளது! 17 இலட்சம் இதய பீடங்களில் திராவிட முன்னேற்றக் கழகத்தின் பெயர் தூய்மையாகப் பொறிக்கப்பட்டுள்ளது! 17 இலட்சம் உள்ளங்களில் அது குடிகொண்டுவிட்டது! அவர்கள் சட்டசபையை எவ்வளவுதான் மாற்றினாலும், மவுண்ட்ரோடிலிருந்து கோட்டைக்குள் குடிபெயர்ந்தாலும் மக்கள் மனதில் பிடித்த 17 இலட்சம் இடங்களை அவர்களால் கோட்டைக்கோ வேறு எங்கோ மாற்றிச் செல்ல முடியாது.

"கடந்த தேர்தலில் நமக்குக் கிடைத்த இடங்கள் எண்ணிக்கையில் குறைவானவைதான்; அதனால் நாம் கலங்கிப்போகவில்லை. மார்ச் 11-ந் தேதியோடு கடைசியாகத் தேர்தல்கள் முடிவடைந்தன; ஆனால் அத்துடன், இந்த நாட்டு அரசியலோ—வரலாறோ முடிந்துவிடவில்லை. மார்ச் 11-ந் தேதிக்குப் பின்னும் வரலாறு தொடர்ந்துவருகிறது. இன்னும் பல தேர்தல்கள்—பலப்பல வெற்றிகள் எதிர்காலத்தில் வரப்போகின்றன.

"தேர்தலில் முதல் தடவையாக அடியெடுத்துவைத்த கட்சி, ஒரு நாட்டு அரசியலில் ஏதேச்சாதிகாரப் போக்கில் ஆண்டுகொண்டிருந்த மிகப் பெரிய—பலம் பொருந்திய கட்சியை எதிர்த்து நின்று, தன்னந்தனியாக—மற்ற எதிர்க்கட்சியினரின் உதவி கிடைக்காமல், கிடைக்காததுமட்டுமல்ல—எந்த அளவுக்கு நம்மைத் தாக்கமுடியுமோ, எந்த வேளையில் தாக்கவேண்டுமோ, எந்த அளவுக்குக் குறைத்தால் நாம் வீழ்ந்துவிடுவோம் என்று சதி செய்து போராடினார்களோ அதையெல்லாம் மீறித்தான், திராவிட முன்னேற்றக் கழகம் 15 தலியமான இடங்களைப் பிடித்துள்ளது. அதனால்தான் காங்கிரஸ் கட்சிக்கு மட்டுமல்ல—மற்றக் கட்சியினருக்கும் திகைப்பையும், யோசித்தால் பயத்தையும் உண்டாக்கும் விதத்தில் நமது வெற்றிகள் உள்ளன.

"நமக்குக் கிடைத்துள்ள ஆதரவு வருங்கால தென்னாட்டு அரசியல் வரலாற்றில் நல்லதொரு சூழ்நிலையை உண்டாக்கியிருக்கிறது. இந்த வெற்றிகள் எதிர்காலத்துக்கு ஒரு வழிகாட்டி. இந்தத் தேர்தல் அனுபவம் அடுத்தத் தேர்தலில் நன்கு பயன்படும் என நம்புகிறோம்.

"இப்பொழுது நடைபெற்ற தேர்தலில் நாம் கலந்து கொண்டது வரப்போகிற தேர்தல்களுக்கு ஒரு முதல் முயற்சி — ஒரு ஒத்திகை! பல ஒத்திகைகள் நடந்த பின் தான், பலவிதமான முயற்சிகளைச் செய்த பின்புதான் கடைசியாக ஒரு முயற்சியில் வெற்றி காணுகிறோம். பல போராட்டங்களுக்குப் பின் — பல தோல்விகளுக்குப் பின், ஒரு நாட்டில் புரட்சி வெற்றி பெறுகிறது! நாட்டின் அரசியலை மாற்றியமைக்க முடிகிறது! புதிய சமுதாயத்தைக் காண முடிகிறது!

"முதல் முயற்சியில் நான் வெற்றி பெற வேண்டுமென்ற நியதி கிடையாது. பெரியதொரு வெற்றியென்றால் அது முதல் முயற்சியிலேயே கிடைத்துவிடாது. பல முயற்சிகள் தொடர்ந்து நடைபெறும்; கடைசியில் ஒரு முயற்சி வெற்றியைத் தேடித் தரும். எனவே, இந்தத் தேர்தலில் நாம் செய்த சில பல தவறுகள்—ஏற்பட்ட தோல்விகள், இந்த அனுபவம் எதிர்கால வெற்றிக்கு வழிகோலுகிறது. இந்தத் தேர்தல் இல்லாவிட்டால் மறு தேர்தல்! 1967-ல் இல்லாவிட்டால் 1977-ல்!

## ஆங்கியம் தி.மு. கழகத் தோழர்

ஊராண்மைக் கழகத் தலைவராகப் போட்டியின்றித் தேர்வு

"ஆங்கியம் தி. மு. கழகத் தோழர் வை. வையாபுரி அவர்கள், ஆங்கியம் ஊராண்மைக் கழகத் தலைவராகப் போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார்"

என்று திருச்சி மாவட்டம்—மேட்டுப்பாளையம் தி. மு. கழகத் தோழர் என். இராமலிங்கம் அறிவிக்கிறார்.

## ஊராட்சி மன்ற உறுப்பினராக கழகத் தோழர் தேர்வு

திருச்செங்கோடு, ஏப். 29—

தி. மு. கழகத் தோழர் கே. பி. செங்கோட்டு வேலு அவர்கள் திருச்செங்கோடு— இராசப்பாளையம் ஊராட்சி மன்ற உறுப்பினராக பெருவாரியான வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவரை எதிர்த்து தோழர்கள் என். செங்கோடன், சுப்பராயன் என்ற இருவர் போட்டியிட்டனர்.

## அதிகாரம், பண பலம் இவற்றால் காங்கிரஸ் வெற்றி பெற்றது

சோஷலிஸ்டு கட்சி கருத்து

சேலம், ஏப். 30—

தமிழ் நாடு சோஷலிஸ்டுக் கட்சி நிர்வாகக் குழுக் கூட்டம், சேலம் அருகிலுள்ள குமரகிரி காட்டில் 27, 28, 29-ந் தேதிகளில் தோழர் என். வி. லோகநாதன் தலைமையில் நடைபெற்றது.

'தேர்தலில் ஜாதி, மத பாகுபாடுகளையும், பணபலத்தையும், அதிகாரத்தையும் பயன்படுத்தி காங்கிரஸ் அதிக இடங்களைக் கைப்பற்றியது' என்று, கருத்து தெரிவிக்கப்பட்டது.

புதிய நாணய முறையை அமுலாக்கியதை முன்னிட்டு தபால் தலைகளின் விலையை உயர்த்தியதைக் கண்டித்தும், புதிய நாணயமும் பழைய நாணயமும் புழக்கத்தில் இருப்பதனால் குழப்பம் ஏற்படுகிறதென்றும், எனவே, பழைய நாணயத்தை குறிப்பிட்ட காலத்திற்குள் சீக்கிரமாக திரும்பப் பெறுமாறு சர்க்காரைக் கேட்டுக் கொண்டு தீர்மானம் நிறைவேறியது.

அணுகுண்டு பரிசோதனையை நிறுத்துமாறு வல்லரசுகளைக் கேட்டுக்கொண்டும், பிரிட்டிஷ் காமன்வெல்த்திலிருந்து இந்தியப் பேரரசு விலகவேண்டும் என்று வலியுறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. (ந-நி.)

## அரசியல் துறவறம்!

சிங்கப்பூர், ஏப். 30—

"எல்லா அரசியல் நடவடிக்கையிலிருந்தும் ஒதுங்கியிருப்பதன் மூலம், சிங்கப்பூருக்கு என்னால் அதிக தொண்டு செய்ய முடியும்"

என்று, சட்டசபைத் தலைவரிடம் அளித்துள்ள இராஜினாமாக் கடிதத்தில்முன்னாள் சிங்கப்பூர் முதலமைச்சர் குறிப்பிட்டுள்ளார்.

அரசியலை விட்டே வெளியேறிய அவர், சிங்கப்பூருக்கு சுயாட்சி வழங்கும் இலண்டன் ஒப்பந்தத்தை எதிர்த்தார் என்பதும், அப்பிரச்சினையின் மீது தேர்தலுக்கு நிற்பதாகச் சவால் விடுத்தாரென்பதும் நினைவு கொள்ளத்தக்கது. தாம் அரசியலில் நீடிப்பது சிங்கப்பூருக்கு ஆபத்தானது என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

## சத்தியவாணி முத்து அவர்களுக்குப் பாராட்டு-பொதுக்கூட்டம்

காஞ்சி - கல்யாணசுந்தரம், கண்ணதாசன், தென்னரசு கலந்துகொண்டனர்

26-3-57 மாலை 6-30 மணிக்கு, சென்னை 10-வது வட்டம் தி. மு. கழகத்தின் சார்பில், தோழியர் சத்தியவாணி முத்து அவர்களைப் பாராட்டி, தோழர் அ. இராசகோபால் தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

தலைவர் தனது முன்னுரையில், தி. மு. கழகத்தின் வெற்றி - தோல்விகளைப் பற்றியும், திராவிடம் வடநாட்டு ஆதிக்கத்தின் கீழ் இருந்து விடுபட வேண்டியதின் அவசியத்தையும் விளக்கினார்.

அடுத்துத் தோழர்கள் வி. சி. தமிழ்தாசன், எஸ். எஸ். தென்னரசு ஆகியோர் தி. மு. கழகத்தின் வலுவையும், மாற்றாரின் எதிர்ப்பையும் விளக்கிப் பேசினர்.

அடுத்துத் தோழியர் சத்தியவாணி முத்து அவர்கள் பாராட்டுதலுக்கு நன்றி தெரிவித்து, சட்டமன்றத்தில் தி. மு. கழகம் ஆற்ற இருக்கும் பணிக்கு பொதுமக்களின் ஆதரவைக் கோரினார்.

பின்னர், தோழர் காஞ்சி - கலியாணசுந்தரம் அவர்கள், 'தோழியர் சத்தியவாணி முத்து அவர்கள் சட்ட மன்றத்தில் நல்ல பல பணிகளை ஆற்றி, மாதர் குல மாணிக்கங்களில் ஒருவராகத் திகழவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

இறுதியாகப் பேசிய தோழர் கண்ணதாசன் அவர்கள், தேர்தலில் மாற்றார்கள் தாம் குறைந்தப் போக்கில் நம்மை எதிர்த்ததையும், நமது அரசியல் கண்ணியத்தையும் விளக்கிப் பேசினர்.

தலைவரின் முடிவுரைக்குப்பின் செயலாளர் நன்றிகூற கூட்டம் முடிவுற்றது.

## சத்திரப்பட்டியில் சுழற்காற்று-பெருமழை

சுமார் ரூ. 20,000 பொருட்சேதம்

சத்திரப்பட்டி, மே 1—

இங்கு, ஏப்ரல் 23-ந் தேதி மாலை 4 மணி யளவில் பலத்த சுழற்காற்றோடு பெருமழை பெய்ததால், சுமார் ரூ. 20,000 வரை பொருட்சேத மேற்பட்டிருக்கின்றது.

காற்றின் விளைவாக பல வீடுகளின் ஓடுகளும் - கூரைகளும் பறந்தனவென்றும், கணேஷ் நெசவாளர் கூட்டுறவு சங்க மேல் மாடிப் பகுதி இடிந்து விழுந்து விட்டதாகவும், புதிதாக அமைக்கப்பட்ட திரைப்படக் கொட்டகை தரைமட்டமாகியும்—இயந்திர அறைகள் 1 பர்லாங் தொலைவிற்கு தூக்கியெறியப்பட்டதென்றும், சுப்பிரமணியர் ஆரம்பப் பள்ளியின் ஓடுகள் தூக்கியெறியப்பட்டு, சில மாணவர்களுக்கு சிறிய காயங்களும் ஏற்பட்டனவென்றும், பல பெரிய மரங்கள் வேரோடு சாய்க்கப்பட்டனவென்றும் தெரிகிறது.

இக்காற்று மழையால் ஏழை கைத்தறி நெசவாளர்கள் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளனர்.

இச்சம்பவங்களை மாவட்ட கலெக்டருக்கு தந்தி மூலம் தெரிவிக்கப்பட்டு, மறுநாள் தாசில்தார் அவர்கள் பார்வையிட்டார்.

தாசில்தார் அவர்களை இவ்வூர் தி. மு. கழகத் தோழர்கள் அழைத்துச் சென்று, சேதமடைந்த பகுதிகளை காட்டியும் - விவரங்கள் கூறிவிளக்கியுருக்கின்றனர்.

## கேட்டீரா, சேதி!

ஆழ்வார்களாலும், நாயன்மார்களாலும் பாடப்பட்ட 23 கோவில்களுக்கு ரூ. 2 இலட்சம் பணஉதவி செய்யப்பட்டுள்ளதாம்! இந்தத் தொகையில் ரூ. 1,42,000 செலவழிக்கப்பட்டுள்ளதாம்.

# மே தின விழாவில் அண்ணா கருத்துரை

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

டாளிகளுக்காகப் பாடுபடுபவர்கள் என்று பெருமை பேசிக்கொள்ளவில்லை: அல்லது, பாட்டாளிகளுக்காக மட்டுமே நாங்கள் பாடுபடுகிறோம் என்றும் கூறமாட்டோம்.

**மார்க்சீயம்**

"கம்யூனிஸ்டுகள், இங்கு, காரல் மார்க்ஸ்—அவர் காலத்திலிருந்த நிலைகளை வைத்துக்கொண்டு கூறிய வர்க்கப் போராட்ட தத்துவத்தை, பேசினார்கள்-பேசுகிறார்கள்.

"காட்டிலே காட்டுமிராண்டிகளாய் வாழ்ந்த மக்கள், நாட்டு மக்களாக - நாகரிகமான வாழ்வு பெற்றவர்களாக—ஒரு சமுதாயமாக வாழத்தலைப்பட்டு, தொழில் வளர்ச்சியும் தோன்றிய காலத்தில், சமுதாயம் இருகூறுகளாகப் பிளவுபட்டது. முதலாளிச் சமூகம், பாட்டாளிச் சமூகம் என்ற கூறுகள் தோன்றின.

"இந்த நிலையை, தனக்கிருந்த பரந்த அறிவினால் உணர்ந்த காரல் மார்க்ஸ், 'எதிர்காலத்தில் இந்த இரண்டு வர்க்கங்களும் மோதிக்கொள்ளும்; முடிவு, தொழிலாளி வர்க்கத்திற்கு வெற்றியே' என்று கூறினார்.

"அவர் கூறிய காலத்தில், சமுதாயம் ஏறத் தாழ இந்த இரண்டு கூறுகளாகவே இருந்தது; ஆனால், இப்போது அந்த நிலையில் இல்லை. இந்த இரண்டு கூறுகளுக்கும் இடையில் ஒரு வர்க்கம், நடுத்தர வகுப்பு தோன்றியுள்ளது.

"ஆனால் கம்யூனிஸ்டுகள் இன்னும் அந்த இரண்டு சமுதாயங்களைப் பற்றி மட்டுமே எண்ணுகிறவர்களாயிருக்கிறார்கள்.

பாட்டாளி வர்க்கத்தைக் கொண்டு மட்டுமே முதலாளி சமூகத்தை ஒழித்துவிடலாம் என்கிறார்கள்.

"ஆனால், நாம் கூறுகிறோம்—இந்த இரண்டு சமூகங்களுக்கும் இடையில் உள்ள நடுத்தர வகுப்பினர், முதலாளிபக்கம் இழுக்கப் படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று கூறுகிறோம்.

"இந்த நடுத்தர வகுப்பினர், அச்சத்திற்கும் — ஆசைக்கும் இடையில் ஊஞ்சலாடிக்கொண்டிருப்பவர்கள்!

"நிலை தாழ்ந்தால், எங்கே பட்டாளியாகிவிடுவோமோ என்ற அச்சமும், ஒரு 'சான்ஸ்' கிடைத்தால் 'முதலாளி' ஆக மாட்டோமா என்ற ஆசையும் அவர்களைப் பிடித்தாட்டுகிறது!

"இந்த நடுத்தர வகுப்பினர் இன்று, பல ஐரோப்பிய நாடுகளில் ஆளும் கட்சியை அமைத்திருக்கின்றனர்.

"அமெரிக்காவில் முதலாளிமார்கள் ஆட்சி நடத்துகிறார்கள்; ரஷ்யாவில் தொழிலாளர்கள் ஆட்சி நடத்துகிறார்கள்; ஆனால் வேறு பல ஐரோப்பிய நாடுகளில் மத்தியதர வகுப்பார் ஆளும் கட்சியினராக உள்ளனர்!

"இந்த நாட்டிலும் நடுத்தர வகுப்பார் இருக்கின்றனர். அவர்கள் முதலாளிகள் பக்கம் இழுக்கப்படாமலிருந்தால்தான், தொழிலாளர்கள் விரும்புகிற ஒரு அரசு அமைய முடியும்.

"நடுத்தர வகுப்பாரே இல்லை என்றோ அல்லது அவர்கள் ஒரு சக்தியே அல்ல என்றோ கூறப்படுமானால், இந்நேரம் இந்த நாட்டில் புரட்சி மூண்டிருக்க வேண்டும். முதலாளி சமூகம் சாய்ந்திருக்க வேண்டும். பாட்டாளி அரசு மலர்ந்திருக்க வேண்டும்; இல்லையே! ஏற்படவில்லையே!

"அதனால்தான் நாம் கூறுகிறோம் — 'தொழிலாளர்களுக்கும் நடுத்தர வகுப்பாருக்கும் இடையே ஒரு அன்புச் சங்கிலித் தொடர்பு வேண்டும்'—என்று!

"தொழிலாளருக்கு நியாயம் கிடைக்க வேண்டுமென்பதை நடுத்தர வகுப்பாருக்குச் சொல்லி, அவர்கள் தொழிலாளருக்கு விரோதமாகப் போய்விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அப்படி நடுத்தர வகுப்பார் தயாரிக்கப்படவேண்டும்.

"அப்போதுதான், தம்மையும் அறியாமல் நடுத்தரவகுப்பார், முதலாளிபக்கம் இழுத்துச் செல்லப்படுவதைத் தடுக்க முடியும்.

"உதாரணத்திற்குச் சொல்ல வேண்டுமானால், கடையில் சில சாமான்களை வாங்கி, அதை ஒரு கூலிக்காரன் தலையில் வைத்து வீட்டிற்கு வந்து நாம் ஆறணா கூலி கொடுப்பதாயும், 'அந்தத் தொழிலாளி இன்னும் இரண்டணா கூடக் கேட்பதாயும் வைத்துக்கொள்வோம். உடனே, நமது தாயார் கூறுகிறார்கள்—'இந்தக் கூலிக்காரர்களே இப்படித்தான்'—என்று!

இதுதான், நம்மையும் அறியாமல், 'நடுத்தர வகுப்பார் முதலாளி பக்கம் இழுத்துச் செல்லப் படுகிறார்கள்,' என்பது!

"இரயில்வேத் தொழிலாளர்கள், ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன் ஒரு வேலைநிறுத்தம் செய்தனர். அந்த வேலைநிறுத்தத்தைத் திறம்பட நடத்த கம்யூனிஸ்டுகள் இல்லாமற் போகவில்லை! வேலை நிறுத்தத்தில் ஈடுபட்ட தொழிலாளர்களுக்கு எத்தகு அடக்குமுறைகளையும் தாங்கிக் கொள்ளும் உள்ள உரம் இல்லாமற் போகவில்லை! அதற்கு ஆதரவாக நாம் துணைநிற்காமல் போகவில்லை! நாம் என்றால்—அன்று திராவிட கழகமாக இருந்தோம்; பெரியார்கூட, 'ஆதரவு தர வேண்டாம்' என்றார்; நான்தான் 'ஆதரவு தந்தாக வேண்டும்' என்று கூறினேன்! அப்போதே கூட எனக்கும் பெரியாருக்கும் கருத்து வேறுபாடு!

"இப்படி, கம்யூனிஸ்டுகள் முன்னின்று நடத்தினர்! தொழிலாளர்கள் உறுதியுடன் நின்றனர்! நாம் துணைநின்றோம்! என்றாலும், அந்த வேலைநிறுத்தம் முறியடிக்கப்பட்டது எதனால்? எப்படி?

"நடுத்தர வகுப்பாரின் ஆதரவு அந்தப் போராட்டத்திற்கு அப்போது கிடைக்கவில்லை. அவர்களுக்கு அறிவை அள்ளித் தரும் பத்திரிகைகள், 'இந்த வேலை நிறுத்தம் கூடாது—தேவையற்றது—நியாயமற்றது—மக்களுக்குத் தொல்லை தருவது—பிரயாணிகளுக்கு இடைஞ்சல் செய்வது — தொழிலாளர்களின் வீண் ஆர்ப்பாட்டம்' என்று எழுதின!

"இதை நான் அப்போதே நண்பர் ஜீவானந்தத்திடம் கூறினேன்; அவர், 'அண்ணாதுரை! நீ ஒரு அவசரக்காரன்!' என்று கூறிவிட்டார்.

"அன்று நடுத்தர மக்களையே, 'வேண்டாம்; அவர்களின் ஆதரவே தேவை இல்லை' என்று பேசியவர்கள், இன்று, 'பிர்லாவே வருக! கேரளத்தில் தொழிற்சாலைகளை அமைத்துத் தருக!' என்று பேசுகிறார்கள்.

"அன்று, நெடுஞ்செழியனைச் சேர்த்துக்கொள்ளுங்கள்,' என்றேன்; 'கூடாது; இவர்களெல்லாம் மத்தியதர வகுப்பினர்; இவர்களைச் சேர்த்துக்கொண்டால், தொழிலாளர் இயக்கத்தின் தூய்மைத் கெட்டுவிடும்,' என்று பேசினார்கள்; இன்று பிர்லாவையே அழைக்கிறார்கள்!

"காரணம் கேட்டால், 'தொழிற்சாலையை நிர்வகிப்பது எப்படி என்பதைக் கற்றுத் தருவதற்காகவே அழைக்கிறோம்,' என்கிறார்கள்.

"நாகப்பாம்பை படுக்கை அறைக்குள் விட்டுவிட்டு, இது நாகப்பாம்புதான்; ஆனால் ஒன்றும் செய்யாது; இதன் ஆட்டத்தை எனது மனைவி நாகவல்லி பார்த்துக் கற்றுக்கொள்வதற்காகத்தான் கொண்டுவந்திருக்கிறேன்' என்பதுபோலிருக்கிறது, அவர்கள் கூறுவது!

"பத்து வருடங்களுக்கு முன் நடுத்தர வகுப்பினரையே வேண்டாம் என்றவர்கள், இன்று முதலாளிமார்களையே அழைக்கின்றனர்; நடுத்தர வகுப்பாரின் ஆதரவும் வேண்டும்,' என்று உணர்ந்து வருகிறார்கள்.

"ஆயிரம் தவறுகள் செய்வார்கள்; ஆனாலும், எவ்வளவு அவசரமாகத் தவறுகளைச் செய்வார்களோ அவ்வளவு அவசரமாகத் தவறுகளைத் திருத்திக்கொள்ள கூடியவர்கள், கம்யூனிஸ்டுகள்! இந்திய அரசியலிலேயே, செய்கிற எண்ணற்ற தவறுகளை மிக மிகத் திருத்திக் கொள்ளக்கூடியவர்கள் கம்யூனிஸ்டுகள்தான்!

"அவ்வளவு நல்லவர்களைப் போய் பொல்லாதவர்களான நமது இயக்கத் தோழர்கள் கடிந்துகொள்வதைக் கண்டால், எனக்கு வருத்தமாக இருக்கிறது.

"தொழிலாளர்களுடைய வாழ்வு, 'கூலி உயர்வு—சில உரிமைகள்,' என்ற அளவில் அடங்கிவிடுவதல்ல!

"இன்று தொழிலாளர் இலாகா மந்திரி ஆர். வெங்கட்ராமன் அவர்கள் பஸ் தொழிலாளர் கூட்டம் ஒன்றில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்—'தொழிலாளர்களே மரியாதையுடன் நடந்துகொள்ளுங்கள்'—என்று!

"நான் அவர் இப்படிக்கூறுவதை வேண்டாம் என்றோ தவறு என்றோ கூறவில்லை; அந்த ஆராய்ச்சியிலும் ஈடுபடவில்லை. அதே தொழிலாளரிடம் நான், 'பகுத்தறிவுடன் நடந்துகொள்ளுங்கள் என்றும் கூறிட என்னை அனுமதியுங்கள்' என்கிறேன்; அவ்வளவுதான்!

"'ஆறணாவிலிருந்து எட்டணாவாக கூலி உயர்வு கிடைத்ததா? மகிழ்ச்சி! ஆனால் கிடைத்த அந்த இரண்டணாவை, அபிஷேகத்திற்கும் ஆராதனைக்கும் செலவிட்டுவிடாதீர்கள்! அந்த இரண்டணாவில் உன் வியர்வை இருக்கிறது! இரத்தம் இருக்கிறது! உன்னையும் உன் குடும்பத்தையும் உயர்த்திக்கொள்ள அந்த இரண்டணாவைச் செலவிடு' என்று கூறுகிறோம், நாம்! 'அனாவசியமாக உன் வியர்வையை, குருதியைப் பாழடித்துவிடாதே,' என்று எச்சரிக்கிறோம், நாம்! கூடாதா? தவறா?

"தொழிலாளர்கள் தங்களின் வாழ்க்கை உயர்வுக்காக மட்டும் பாடுபட்டால் போதாது! இன உணர்ச்சியும், நாட்டுப் பற்றும் கொண்டவர்களாக தாய்த் திரு நாட்டிற்கு ஆற்றவேண்டிய கடமையையும் அவர்கள் ஆற்றவேண்டும்.

"தாய்த்திரு நாடு வாழவேண்டுமானால், அது தன்னாட்சி பெற்றால்தான் முடியும்—என்ற மூலாதாரப் பிரச்சினையையும் அவர்கள் புரிந்துகொண்டாக வேண்டும்.

"அந்த வகையில் தொழிலாளர்கள், நல்ல தொழிலாளர்களாக மட்டுமின்றி திராவிடர்களாகவும், விடுதலை வீரர்களாகவும் விளங்குமாறு செய்ய இந்த மே தின அணிவகுப்புகள் பயன்படவேண்டுமென விழைகிறேன்."

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

நிலைமைக் கழகம் அறிக்கை எண்: 3/57

## சென்னை மாவட்டக் கழக உறுப்பினர்களுக்கு:

★

தி. மு. கழகப் பொதுக்குழுவால் முடிவெடுக்கப்பட்டு, கழகத்திலிருந்து விலக்கிவைக்கப்பட்டவர்களின் காரணமாகக் காலியாகியுள்ள மாவட்டச் செயலாளர் பொறுப்புக்கும், இரண்டு பொதுக்குழு உறுப்பினர்கள் பொறுப்புகளுக்கும், தோழர் சி. டி. டி. அரசு அவர்களின் விலகுதலின் காரணமாகக் காலியாக உள்ள பொதுக்குழு உறுப்பினர் பொறுப்புக்கும், புதிய பொறுப்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதற்குரிய நாளாக 12—5—57-ஆம் நாள் இதன்மூலம் உறுதிசெய்யப்படுகிறது.

தேர்தல் 12—5—57 அன்று காலை 10-மணிக்கு சென்னை 'அறிவக'த்தில் நடைபெறும்.

30—4—57-க்குள் தலைமைக் கழகத்திடம் பதிவான முறைப்படியாக உள்ள பிரதிநிதிகள் மட்டுமே தேர்தலில் அனுமதிக்கப் படுவார்கள்.

தேர்தல் நடத்திவைக்கும் ஆணையாளரின் பெயர் பின்னால் அறிவிக்கப்படும்.

1—5—57
'அறிவகம்'
சென்னை-13

இரா. நெடுஞ்செழியன்
பொதுச்செயலாளர், தி. மு. க.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

சேலம் தேர்தல் வழக்கு நிதி:

## கோவையில் சிறப்புக் கூட்டம்

5—5—57 காலை 9-மணிக்கு கோவை—தியேட்டர் ராயலில் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் **'இலக்கிய இன்பம்'** எனும் பொருள்பற்றி சிறப்புரை ஆற்றுவார்.

நன்கொடை:
ரூபாய் 1; அணா 8.
பெண்கள்: அணா 4.

## மு. கருணாநிதி

சுற்றுப்பயண நிகழ்ச்சிகள்

மே
2; சென்னை-அயன்புரம்
5: திருவல்லிக்கேணி
6: அமைந்தகரை
11: குளித்தலை
12: திருச்சி—காலை-சிறப்புக் கூட்டம்
மாலை-உறையூர்
19, 20: ஏற்காடு தொகுதி (சேலம் மாவட்டம்)
24: மேட்டுப்பாளையம் (திருச்சி மாவட்டம்)
25: எடமேலையூர்
26: மன்னார்குடி

சென்னை—அயன்புரம் முத்தமிழ் மன்றத் துவக்க விழா

4-5-57 மாலை 5-30 மணிக்கு சென்னை—அயன்புரத்தில் (சயானி டாக்கீஸ் சமீபம்) மேற்படி மன்றத் துவக்க விழா, தோழர் மு. தாமோதரம் தலைமையில் நடைபெறும்; தோழியர் சத்தியவாணிமுத்து, தோழர்கள் கண்ணதாசன், பி. ஆர். கோகுலகிருட்டினன், வ. ம. அரங்கநாதன் ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்; தோழர் டேப்-இராதாமாணிக்கம் இன்னிசை வழங்குவார்.

சென்னையில் வெற்றி பெற்ற சட்டமன்ற உறுப்பினர்களுக்குப்

## பாராட்டு விழா

6—5—57 மாலை 6-மணிக்கு சென்னை — அமைந்தகரையில், சென்னை நகரில் வெற்றி பெற்ற சட்டமன்ற உறுப்பினர்களுக்குப் பாராட்டு விழா நடைபெறும்.

அதுபோது அண்ணா அவர்களும் தோழர் மு. கருணாநிதி அவர்களும் பாராட்டுரை வழங்குவர்.

## கோவையில்

மே விழா நிகழ்ச்சிகள்

*

சுந்தராபுரம்:

3—5—57 மாலை 5 மணிக்கு கோவை — சுந்தராபுரம் கே. வி. கே. சாமி படிப்பகத் திறப்பு விழாவும்—மே தின விழாவும் நடைபெறும்.

குனியமுத்தூர்:

மாலை 7-மணிக்கு குனியமுத்தூரில் மே தின விழா நடைபெறும்.

கோவை:

இரவு 9 மணிக்கு கோவை—தர்மராசா கோயில் மைதானத்தில் மே தின விழா நடைபெறும். மேற்கண்ட நிகழ்ச்சிகள் அனைத்திலும் தோழர்கள் நாஞ்சில்—கி. மனோகரன், சி. டி. தண்டபாணி, தங்கமாணிக்கம், எஸ். ஏ. இராசமாணிக்கம், மு. இராமநாதன் ஆகியோர் கலந்து கொள்வர்.

காடுபட்டி:

4-5-57-ல் மதுரை மாவட்ட காடுபட்டி தி. மு. கழகச் சார்பில் மே தின ஊர்வலமும்—பொதுக் கூட்டமும் நடைபெறும்; துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன், மதுரை மாவட்டச் செயலாளர் எஸ். முத்து, தோழர்கள் பி. சமதர்மம், மெய் அன்பன் ஆகியோர் கலந்து கொள்வர்: என். வி. நடராசன் அவர்கள் கொடியேற்றி வைப்பர்.

### திருமணம்

3—5—57 காலை 7-30 மணிக்கு சென்னை—சூளை கலியாணமேஸ்திரி தோட்டத்தில், தோழர் சி. கிருட்டினன் — தோழியர் இர. அஞ்சலை வாழ்க்கை ஒப்பந்த விழா, தோழியர் சத்தியவாணிமுத்து அவர்கள் தலைமையில் நடைபெறும்; அதுபோது, தோழர்கள் க. அறிவழகன், ஆர். ஜார்ஜ் மற்றும் பலர் வாழ்த்துரை வழங்குவர்.

சொற்பயிற்சிக் கூட்டங்கள்

3—5—57 மாலை 6 மணிக்கு, பிராட்வே, எண் 4/88, சென்னை 11வது வட்ட தி. மு. கழகப் பணிமனையில், தோழர் கு. சண்முகம் தலைமையில் 'சொல்லும்—செயலும்' எனும் பொருள்பற்றி கழகத் தோழர்கள் பலர் பேசுவர்.

*  *  *

4—5—57 இரவு 10 மணிக்கு, மதுரை—ஆட்டு மந்தை பொட்டல் சந்து, மீன் மார்க்கெட்—அறிவு வளர்ச்சி படிப்பக 'அன்பழகன் சொற்பயிற்சி மன்றம்' 3-வது ஆண்டின் முதல் கூட்டம் தோழர் ஏ. எஸ். கலைநேசன் தலைமையில் நடைபெறும்; அதுபோது 'தேர்தல் முடிவும்—தி. மு. க.-வும்' எனும் தலைப்பில் தோழர்கள் எஸ்.பி. எஸ். அமீது, கே. பி. சாகுல் அமீது மற்றும் பல தோழர்கள் சொற்பொழிவாற்றுவர்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

